# அறிமுகம்

ஒவ்வொரு சைவசமயத்தவரும் நித்தியமாக செய்துவரும் சிவபூசை ஆன்மார்த்தபூசை எனப்படும். இந்த சிவபூசை இருவகைப்படும். ஒன்று சிவாகமவழிப் பூசை, மற்றையது அன்புமார்க்கப் பூசை. சிவாகமவழிப்பூசையினைச் செய்வதற்கு சமயதீக்கையும் விசேடதீக்கையும் பெற்றிருத்தல் வேண்டும். தீக்கைகள் யாவும் விதிப்படி ஒழுகக்கூடிய அனைவரும் பெற்றுக்கொள்ளக் கூடியதேயாகும். சிவாகம வழிப்பூசை செய்யக்கூடிய சூழல் அற்றோர், அன்புமார்க்கப்பூசையேனும் இல்லத்தில் செய்துவருதல் வேண்டும்.

சிவபூசையினை மிகவும் சுருக்கமாகச் செய்வது முதல் மிக விரிவாகச் செய்வதுவரை பல படிநிலைகளில் பலவகைத்திறத்தில் உண்டு. ஒரு பிள்ளை நாள்தோறும் 2 மணித்தியாலம் கற்கின்றது. இன்னொரு பிள்ளை நாள்தோறும் 6 மணித்தியாலம் கற்கின்றது. அதிக மணித்தியாலம் கற்கும் பிள்ளை அதிக பலனைக் கல்வியில் அடைவதற்கு அதிக வாய்ப்புண்டு. அதேசமயம், குறைந்த மணித்தியாலங்களே கற்கும் பிள்ளை சிலசமயம் தனது நினைவாற்றலால் ஏனைய பிள்ளைகளைவிட அதிக பலன்களையும் அடையும் சந்தர்ப்பங்களும் உண்டு. நினைவாற்றல் கைகொடுக்கவில்லையென்றாலும், 2 மணித்தியாலக்கல்வி சிறிது பயனையேனும் கட்டாயம் கொடுத்தே தீரும். கல்விக்கு நேரத்தையே ஒதுக்காது வீணே கழிக்கும் ஒரு பிள்ளையினைவிட சிறிதளவேனும் நேரம் ஒதுக்கிக் கற்கும் பிள்ளை போற்றப்படவேண்டிய பிள்ளையாகும். அதுபோல், சிவாகமவழியில் பூசைகளைச் செய்யும் சூழலை அமைத்துக்கொள்ளும் மனவளம் இல்லாவிட்டால், குறைந்தபட்சம் அன்புமார்க்கச் சிவபூசையேனும் நாள்தோறும் செய்துவருதல் வேண்டும். சிவபூசையினை நினைத்தாலே பெரும்புண்ணியம் என்னும்போது, சிவபூசையினை சிறிது நேரம் ஒதுக்கியேனுஞ் செய்துவருதல் பெரும் புண்ணியத்தினை ஈட்டித்தரும்.

இந்த நூலிலே சிவபூசையினை பலவாறு சுருக்கி அனைவரும் செய்யக்கூடியவிதத்தில் தரப்பட்டுள்ளது. இல்லத்தில் அனைவரும் சிவபூசை செய்தொழுகவேண்டும் என்னும் சைவ மக்களின் நலன்பொருட்டு, எளிமையான முறையில் சிவபூசை செய்யும் படிமுறைகள் வழங்கப்பட்டுள்ளது. **“இல்லங்களில் சிவபூசை செய்வோம்”** என்னும் இந்நூல், இலங்கை சைவநெறிக் கழகத்தினால் வெளியிடப்படத் திருவருள் அமைந்தது நம் தவப்பயனேயாகும்.

**இலங்கை சைவநெறிக் கழகம்**



# சிவபூசை - அனைவருஞ் செய்து நலன்கள் யாவும் பெறுவோம்!

***“அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது”*** என்று அருளியுணர்த்தியுள்ளார் ஔவையார் பெருமாட்டியார். அங்ஙனம் மானிடராய்ப் பிறந்தாலும் சைவசமயத்தினைச் சார்ந்து உயர்வது பல பிறவிகளில் செய்துவரும் பெரும்புண்ணியப்பேறினால் அமைவதென்பதினை அறியுமாறு, ***“சைவமாம் சமயஞ் சாரும் ஊழ்பெறல் அரிது”*** என்று சிவஞானசித்தியார் என்னும் அருள்நூலில் அருணந்தி சிவாச்சாரியார் பெருமான் அறிவுறுத்துகின்றார். ***“தலையே, நீ வணங்காய்”*** என்றும், ***“கண்காள் காண்மின்களோ”*** என்றும், ***“செவிகாள், கேண்மின்களோ”***என்றும் பலவாறு இம்மானிடப்பிறவியின் பயன் சிவபெருமானினை வழிபடுவதே என்று அப்பர்சுவாமிகளும் அருளிச்செய்துள்ளார்.

இங்ஙனம் அரிய தவப்பயனினால் வாய்க்கும் சைவசமய வாழ்வினை இப்பிறவியில் பெற்றுக்கொண்டவர், சிவபெருமானினை தம் இல்லங்களில் வழிபடாது தம் வாழ்நாளினை வீணாக்குவது முறையோ? குரங்கு, அணில், காகம் இவை மூன்றும் சிவபெருமானினை வழிபட்டு பேறுபெற்ற திருத்தலம் திருக்குரங்கணில் முட்டம் என்னும் திருத்தலமாகும். எறும்பு சிவபெருமானினை வழிபட்டு பேறுபெற்றது திருவெறும்பூர் என்னும் திருத்தலமாகும். ஈ சிவபெருமானினை வழிபட்டு பேறுபெற்றது திருஈங்கோய்மலை என்னும் திருத்தலமாகும். இதுபோல், ஆமை, கழுகு, சிலந்தி, யானை, எலி, தேனீ, வண்டு, கருங்குருவி, பசு, பன்றி, நாரை, பாம்பு, முயல் என்று பல்வேறு பறவைகளும் விலங்குகளும் பூச்சிகளும் சிவபெருமானை வழிபட்டு பேறு பெற்றிருக்கும்போது, மனிதப்பிறவி பெற்ற நாம் சிவபெருமானினை வழிபடாவிட்டால், ஆறறிவுடைய இப்பிறவி வீணேபோய்விடுமே!

சிவம் என்றால் செம்மை என்று பொருள். மங்கலம் என்று பொருள். இல்லத்தில் சிவநாம ஒலி இருப்பதுவே மங்கலத்தினைத் தரும். சிவவழிபாடு உள்ள இல்லமே இல்லம் எனப்படும். ஏனையவை சவச்சாலைகளுக்கே

நிகராகும். சிவம் இல்லாவிட்டால் எல்லாஞ் சவம் என்பது நம் முன்னோர் அருள்வாக்கு. சிவபெருமானை அழைக்காத தக்கன் யாகம் அழிந்தது. சிவபெருமானை முழுமுதலாக ஏற்காத தாருகாவனத்து முனிவர் யாகம் அழிந்தது. சிவபெருமான் திருவுருவங்களினைப் பேணாத வீடுகளில் எங்ஙனம் மங்கலம் விளங்கும்? சிவபெருமானின் திருவுருவம் பொன்னார்மேனியன் வடிவத்தில் சைவசமயத்தார் வீடுகளில் சுவாமி அறையிலேயோ, சுவாமிப்படங்கள் வைத்து வழிபடும் இடத்திலேயோ நடுநாயகமாக விளங்குதல் வேண்டும். ***நாள்தோறும் பூவும் நீரும் சிவபெருமானுக்கு வைத்து விளக்கேற்றி திருமுறைகள் ஓதி தூபம் காட்டி வழிபடும் வழக்கம் சைவசமயத்தார் இல்லங்களில் விளங்குதல் வேண்டும்.***

## சிவபெருமானை அனைவரும் வழிபடலாமா?

ஓம்! சிவபெருமானை விலங்குகளும் பறவைகளும் வழிபட்டு நலம் பெற்றன என்பதினால், சிவபெருமானை அனைவரும் வழிபட எந்தவொரு தடையும் இல்லையென்பது பெறப்படும்.

## சனி மாற்றம், இராகு மாற்றம் என்பவற்றிற்கு சனி இராகு முதலிய கிரக தேவர்களினை வழிபடுவது நன்மை பயக்குமா?

இல்லை! சிவபெருமானை வழிபடுவதே நன்மையினை அருளும். நள மகாராசனுக்கு சனியினுடைய தாக்கம் ஏற்பட்டதும், திருநள்ளாறு திருத்தலத்திற்கு நளமகாராசன் வந்து சிவபெருமானைப் பூசைசெய்து வழிபட்டே, சனியின் பிடியிலிருந்து விடுபட்டான். நளமகாராசன் சனைச்சரனை வழிபட்டதாக எந்தவொரு புராணச்செய்தியும் இல்லை. இது ஏன் எனில், நாங்கள் செய்த நல் வினை தீவினைகளினை இன்ப துன்பங்களாக ஊட்டுவதே கிரக தேவர்களின் தொழில்களாகும். கிரக தேவர்களுக்கு இத்தொழில்களினையும் பதவிகளினையும் அருளியவர் சிவபெருமான் ஒருவரேயாம். இயமனுக்கு உயிரை எடுக்கும் தொழிலை அளித்த சிவபெருமானே, தம்மை வழிபட்ட மார்க்கண்டேயரின் பொருட்டு, இயமனை காலால் உதைத்து, மார்க்கண்டேயரைக் காத்தருளினார்.

சனாதிபதியிடம் மன்னிப்புக்கேட்பது ஒன்றே நமக்கு விதிக்கப்பட்ட தண்டனையில் இருந்து விடுபட வழிவகுக்கும். சிறைச்சாலை காவலர்களிடம் மன்னிப்புக்கேட்பதினால் எந்த நன்மையும் உண்டாகா! அதுபோல்,

வினைகளினை ஊட்டும் தேவர்களுக்கெல்லாம் அதிபதியாக விளங்கும் தேவாதிதேவனாகிய சிவபெருமானே நம் பாவங்களினையெல்லாம் ஒழித்து அருளவல்லவர். சிவபெருமானை வழிபட்டே குபேரன் சங்கநிதிக்கும் பதுமநிதிக்கும் உரியவனானான். சிவபெருமானை வழிபட்டே திருமால் சக்கர ஆயுதத்தினைப் பெற்றுக்கொண்டார். சிவபெருமானை வழிபட்டே இராகு, கேது, சந்திரன் எல்லாம் தம் பாவங்களினை நீக்கிக்கொண்டனர்.

சனைச்சரனையோ இராகு கேதுவினையோ வழிபட்டு நலம்பெற முடியும் என்றொரு செய்தி வேத – ஆகம – புராண – இதிகாசங்கள் எங்கும் இல்லை. திருஞானசம்பந்தர் முதலிய சமய குரவர், ஏனைய நாயன்மார், மெய்கண்டார் முதலிய சந்தான குரவர், தாயுமானசுவாமிகள், அருணகிரிநாதப்பெருமான், பாம்பன்சுவாமிகள் என்று எந்தவொரு அருளாளரும் தேவர்களினை வழிபட்டு நலம்பெற முடியும் என்று அருளிச்செய்திருக்கவில்லை. எனவே, கிரகதேவர்களினை வழிபாடு செய்யும் பூசைகளெல்லாம் பணம் சம்பாதித்துக் கொள்வதற்கு சிலரால் உருவாக்கப்பட்டுள்ள போலிச்செயல்களேயாகும். கிரகதோச பரிகாரப்பூசைகளென்று சிலர், கிரகதேவர்களுக்கு செய்யும்; செய்விக்கும் பூசைகள் நன்மைதரும் என்பதற்கு எந்தவொரு சிவாகமச் செய்திகளும் இல்லை. கிரகதேவர்களால் வரும் தீமைகளுக்குரிய பரிகாரப்பூசைகளெல்லாம் சிவபெருமானுக்கே செய்யப்படுதல் வேண்டும். நம் மக்கள் இவ்வுண்மைகளினைத் தெளிந்து, சிவவழிபாட்டினைச் செய்து நன்மை பெறவேண்டும்.

**பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்**
**பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்**
**சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்**
**சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்**
**உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்**
**உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கே னென்றும்**
**புற்றரவக் கச்சார்த்த புனிதா வென்றும்**
**பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே** – *அப்பர்சுவாமிகள்*

**பொருள் :** நெஞ்சே! நான் சொல்வதனைக் கேட்பாயாக. நம்மைப் பற்றி நிற்கும் பாவங்களை அழிக்க வேண்டினால், மேம்பட்ட வழிக்குச் செல்ல வேண்டும் என்று விரும்பினால், உன்னைச் சுற்றி நிற்கும் வினைகளைப்

போக்க நீ விரும்பினால், நான் சொல்வதைக் கேள்! "எனக்கு உறவினரும் நீயே! துணையும் நீயே! உன்னைத் தவிர வேறு எந்தத் தெய்வத்தையும் நான் பரம்பொருளாக வணங்கேன்! புற்றில் வாழத்தக்க பாம்பினைக் கச்சாக அணிந்த தூயோனே! சோலைகள் சூழ்ந்த ஆரூரனே!" என்று எம் பெருமானைப் பலகாலும் துதிப்பாயாக.

## இல்லங்களில் மச்சம் முதலியன உண்பவர்கள் சிவபெருமானை வைத்து வழிபடலாமா?

சிவபெருமானை வழிபடுவதற்கு எந்தவொரு தடையும் இல்லை.

**ஊனொடு உண்டல் நன்றென ஊனொடு உண்டல் தீதென**
**ஆனதொண்டர் அன்பினால் பேசநின்ற தன்மையான்**
**வானொடு ஒன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்று**
**ஆனொடு ஐந்தும் ஆடினான் ஆனைக்காவு சேர்மினே**

*- திருஞானசம்பந்தர் பெருமான்*

**பொருள்:** ஊனொடு உண்பது நன்று என்றும், ஊனொடு உண்பது தீதென்றும் ஆன இரண்டுவிதமான தொண்டர்களின் அன்பிற்கும் கட்டுண்ட தன்மையினனும், பிறைச்சந்திரனைச் சடையில் சூடி, சத்தியப் பொருளாக என்றும் நிலைத்து நின்று, பசுவிலிருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் திருமுழுக்காட்டப் படுகின்றவனுமாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவானைக்கா என்னும் திருத்தலத்தைச் சார்ந்து அவனை வழிபட்டு உய்யுங்கள்.

ஊன் உணவு உண்ணுதல் நன்றென்று இருப்பவர்களும் தீதென்று உரைப்பவர்களும் கொண்டுள்ள அன்புக்கு கட்டுப்பட்டு விளங்குபவர் சிவபெருமான் என்று திருஞானசம்பந்தப்பெருமான் அருளிச்செய்துள்ளார். சைவ உணவு என்பது உணவு வகைகளில் உயர்ந்ததேயாகும். எனினும் சிறப்பான அந்த உணவுப்பழக்கத்தினைக் கைக்கொள்ளும் பக்குவம் வாய்க்காதவர்களாயினும் சிவபெருமான்பால் அன்புகொண்டு வழிபட்டால் அவர்களுக்கும் நல்லதே செய்பவர் சிவபெருமான் என்பதுதான் திருஞானசம்பந்தப் பெருமானின் அருள்வாக்கு. ஒரு குழந்தை கல்வியினைப் பெறுவது பாடசாலையில் படிப்பதினாலேயேயாகும். கல்வியினைப்

பெற்றவர்களுக்கு மட்டுமே பாடசாலையில் அனுமதியென்றால், எந்தக் குழந்தைக்கும் கல்வி கிடைக்காது! அதுபோல், நல்ல ஒழுக்கங்களினை ஒருவர் பெற்றுக்கொள்வது சிவவழிபாட்டினாலேயேயாகும். எனவே, ஒழுக்கக் குறைபாடுகள் இருந்தாலும் சிவவழிபாடு செய்துவரும்போது, கொஞ்சம் கொஞ்சமாக உயிர் நல்ல உணர்வுகளினைப் பெற்று மேம்படத் தொடங்கும். இதனை சைவ நூல்கள் ஆணித்தரமாகக் கூறுகின்றன. எனவே, இல்லத்தில் சிவவழிபாட்டினை ஒருபோதும் கைவிடாதீர்கள்! சிவவழிபாட்டினால் எப்போதும் நன்மையே உண்டாகும்! சிவவழிபாடென்பது எல்லா தெய்வங்களினையும் மகிழ்விக்கும் வழிபாடாகும். நம் முன்னோர்களினையெல்லாம் உய்வித்து மகிழ்விப்பதற்கு ஒரேயொரு வழி சிவவழிபாடொன்றேயாகும்.

சிவபெருமானைப்போல் மங்கலக் கடவுள் ஒருவரும் இல்லை. ஏனைய தெய்வங்களெல்லாம் பிறந்து இறந்து உழலும் உயிர்களேயாகும்.

**நூறுகோடி பிரமர்கள் நொந்தினர்**
**ஆறுகோடி நாராயணர் அங்ஙனே**
**ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர்**
**ஈறில்லாதவன் ஈசன் ஒருவனே!** *– அப்பர் சுவாமிகள்.*

சிவபெருமான் பிரணவடிவம் தாங்கும்போது பிள்ளையார் என்றும், ஆறுமுக வடிவம் தாங்கும்போது முருகப்பெருமான் என்றும் போற்றப்படுவார். சிவபெருமானின் சத்தியே உமாதேவியார் என்று போற்றப்படுவார். சிவபெருமானே திருமால் வடிவமும் தாங்கிக் காத்தல் தொழிலும் செய்வார். பக்குவ உயிர்களுக்குத் திருமால் பதவிகளும் வழங்கி அந்த உயிர்களுக்கு வைகுண்டப்போகமும் கொடுத்தருளுவார். அந்த உயிர்கள் இராமனாய் கண்ணனாய் அவதரிக்கும்போது அவற்றின் வழிபாட்டினை ஏற்றும் அருள்செய்வார். சிவபெருமானே பிரம்மனாயும் உருத்திரனாயும் இருந்து படைத்தல், அழித்தல் தொழில்களினையும் செய்வார். சிவபெருமானே மகேசுவரனாயும் சதாசிவனாயும் இருந்து மறைத்தல், அருளல் தொழிகளினைச் செய்வார். சிவபெருமான் இந்த தொழில்கள் யாவற்றுக்கும் அப்பாற்பட்டு நின்று விளங்கும் பெருங்கடவுளும் ஆவார். இராமர் அகத்திய முனிவரிடம் சிவதீக்கை பெற்று சிவபெருமானினை வழிபட்டு இராவணனை

வெல்லும் பலத்தினைப் பெற்றுக்கொண்டதாக பத்மபுராணம் கூறுகின்றது. கண்ணன் உபமன்யு முனிவரிடம் சிவதீக்கை பெற்று சிவபெருமானினைப் பூசித்து நற்பேறுகள் பெற்றுக்கொண்டார் என்று மகாபாரதம் கூறுகின்றது. இப்படிப்பட்ட பெருங்கருணைக் கடலாகிய சிவபெருமானை வழிபடும் வாய்ப்புப்பெற்றுக்கொண்டவர்களே சைவசமயத்தவராவர். எனவே, நாம் அனைவரும் சிவபெருமானை நம் இல்லங்களில் வழிபடுவோம். சிவபெருமானைப் பூவும் நீரும் கொண்டு வழிபட்டாலே பெரும் நன்மைகள் கிடைக்கும். சிவபெருமானை மகிழ்விப்பது ஒன்று உண்டெனில் அது நாம் அவர்பால் கொண்டுள்ள பத்தியேயாகும்.

**நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே**
**புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்**
**பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு**
**நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே.** *- அப்பர்சுவாமிகள்*

## சிவபெருமானுக்கு பூசையினை நாள்தோறும் செய்துவரும்போது ஏதேனும் தவறுகள், குறைகள் நிகழ்ந்தாலோ, பூசைசெய்யாது ஒருசில நாள்கள் இருந்தாலோ ஏதேனும் குறை ஏற்படுமா?

ஒவ்வொரு தாயும் தன்னுடைய மழலைக் குழந்தை “அம்மா” என்று ஒவ்வொரு நாளும் அழைக்கும்போதும் மகிழ்வடைகின்றாள். ஒரு நாள் அழைக்கத்தவறினால், அந்தத் தாய் தன்னுடைய குழந்தையினைத் தண்டிப்பதில்லை. அப்படித் தண்டிப்பவள் உண்மையான தாயாக இருக்கமாட்டாள்! சிவபெருமான் கருணைக்கடல்! ***“அம்மையே அப்பா”*** என்று நம்திருமுறைகள் சிவபெருமானைப் போற்றுகின்றது. தாயினிற் சிறந்த தயாவான தத்துவன் என்று திருமுறை சிவபெருமானைக் கொண்டாடுகின்றது. சிவவழிபாடு செய்துவரும் காலத்தில் வினைகள் நம்மைப் பெரிதும் தாக்காது. அதாவது, சிவபூசைப் பலம் அதிகரிக்கும்போது தீவினைப்பலம் எல்லாம் கெடத்தொடங்கும். தலைக்கு வருவது தலைப்பாகையோடு போவதுபோல் வினைகள் யாவும் ஒழியும். சிவவழிபாட்டினைக் கைவிட்ட நாள்களில் நம் தவக்குறைவால் ஏதேனும் தீவினைகள் தாக்கினால், அது நாம் கவசம் இன்றிப் போர்க்களத்தில் நின்றதால் வரும் விளைவு போன்றதேயொழிய வேறொன்றும் அல்ல! இறைவன் ஒருபோதும் தீமை செய்வதில்லை. நாம் செய்யும் சிவபூசை கவசம்போல் நின்று நம்வினைகளில் இருந்து காத்து நம்மைப் பக்குவஞ் செய்யும்.

**பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்**
**போகமும் திருவும் புணர்ப்பானைப்**
**பின்னை என்பிழையைப் பொறுப்பானைப்**
**பிழை எலாம் தவிரப் பணிப்பானை**
**இன்ன தன்மையன் என்று அறியவொண்ணா**
**எம்மானை எளிவந்த பிரானை**
**அன்னம் வைகும் வயற்பழனத்தணி**
**ஆரூரானை மறக்கலுமாமே!** *- சுந்தரமூர்த்தி சுவாமிகள்*

பின்னை என் பிழையைப் பொறுப்பானை பிழை எல்லாம் தவிரப் பணிப்பானை என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்திருப்பதை சைவசமயத்தார் தம்தலைமேற் கொண்டு ஒழுகவேண்டும். இவ்வுண்மைகளுக்கு மாறாக எவரேனும் எந்தவொரு செய்தியினையேனும் சொல்வார்களாயின், அவர்களெல்லோரும் சிவபாதகர்கள் என்று கருதிப் புறந்தள்ளுக!

பன்றிக்குட்டிகளுக்காக இரங்கிவந்து பால்கொடுத்த பரமனே சிவபெருமான்! சுந்தரமூர்த்தி நாயனாருக்காகக் காதல் தூது சென்ற பெருங்கருணையாளனே சிவபெருமான்! மாணிக்கவாசகப்பெருமானுக்காகப் பிரம்படிபட்ட பேரருளாளனே சிவபெருமான்! எங்கள் பிழைகளினையெல்லாம் பொறுத்து, பிழைகளிலிருந்தெல்லாம் காத்து, எம்மை வாழ்வித்து உய்விப்பதே சிவபெருமானின் அருட்கருணையாகும். சிவபூசை இயன்றளவு, சிறுபொழுதேனும் ஒதுக்கி நாள்தோறுஞ் செய்துவருவோம்.

 எல்லாம் திருவருட் சம்மதம் 

# இல்லத்தில் செய்யவேண்டிய எளிமையான சிவபூசை

## 1) மந்திரத் திருநீறு அணிதல்

திருநீறினை வலக்கையின் பெருவிரல், நடுவிரல், மோதிரவிரல் மூன்றினாலும் பற்றி எடுத்து இடக்கையின் உள்ளங்கையில் இட்டு, வலக்கையினால் மூடிக்கொண்டு ***"மந்திரமாவது நீறு"*** திருப்பதிகம் படித்து, ***சிவசிவ*** என்று உச்சரித்தவாறு உத்தூளனமாய் (நெற்றி முழுவதும் பரவிப்பூசுதல்) அணிந்துகொள்க.

*திருச்சிற்றம்பலம்*

**மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு**
**சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு**
**தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு**
**செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே.**

*திருச்சிற்றம்பலம்*

## 2) பிள்ளையாரினை வழிபடுதல் வேண்டும்



"ஓம் கணபதியே போற்றி" என்று ஓதி,

*திருச்சிற்றம்பலம்*

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவர் இடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம் உறை இறையே *(தேவாரம்)*

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும்பெருக்கும் உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை. *(பதினொராம் திருமுறை)*

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமதுள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவோம் *(விருத்தாசல புராணம்)*

*திருச்சிற்றம்பலம்*

என்று தோத்திரங்கள் ஓதி,

ஓம் பிள்ளையார் பெருமானே போற்றி
ஓம் தும்பிக்கை நாதனே போற்றி
ஓம் பிரணவச்சிவமே போற்றி
ஓம் ஐந்துகரத்தவனே போற்றி
ஓம் கற்பக விநாயகனே போற்றி

என்று பூக்கள் கொண்டு பிள்ளையாரினை வழிபட்டு மூன்றுதரமேனும் ஐந்து தரமேனும் குட்டிக்கொள்க.

## 3) சிவகுரு வழிபாடு

சிவகுருவழிபாடு செய்யும்போது இருகரங்களும் உங்கள் தலைக்குமேல் கூப்பி வழிபடுதல் வேண்டும்.

சிவகுருவழிபாடென்பது குருமார்களுக்கெல்லாம் சிவஞானத்தினை அருளும் சிவபெருமானின் தென்முகக்கடவுள் வடிவத்தை (தட்சிணாமூர்த்தி பெருமானை) வழிபட்டு, திருநந்திதேவரை வழிபட்டு, சைவசமயத்தின் சமயகுரவர்கள், சந்தானகுரவர்களினை வழிபட்டு, சைவ சமயத்தவர்களாகிய நம்மை வழிப்படுத்தும் சைவக்கோலம் உடைய சிவகுருமார்களை வழிபடுவதாக அமைத்துக்கொள்ளுதல் வேண்டும்.

### 3.1 ) தென்முகக்கடவுள் வழிபாடு (தட்சிணாமூர்த்தி வழிபாடு)



*திருச்சிற்றம்பலம்*

**கல்லாலின் புடையமர்ந்து நான்மறை**
**ஆறங்கம் முதல்கற்ற கேள்வி**
**வல்லார்கள் நால்வர்க்கும் வாகிறந்த**
**பூரணமாய் மறைக்கு அப்பாலாய்**
**எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை**
**இருந்தபடி இருந்து காட்டிச்**
**சொல்லாமல் சொன்னவரை நினையாமல்**
**நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்**

*திருச்சிற்றம்பலம்*

### 3.2) திருநந்திதேவர் வழிபாடு

*திருச்சிற்றம்பலம்*

**ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்**
**செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்**
**மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய**
**கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்**

*திருச்சிற்றம்பலம்*

### 3.3) சமயகுரவர்கள், சந்தானகுரவர்கள் வழிபாடு

*திருச்சிற்றம்பலம்*

**பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி**
**ஆழிமிசைக் கண்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி**
**வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி**
**ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி**

**ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார் இணைத்தாள் போற்றி**
**நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த அருணந்தி நற்றாள் போற்றி**
**நீராண்ட கடந்தைநகர் மறைஞான சம்பந்தர் நிழற்றாள் போற்றி**
**சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத் திருத்தாள் போற்றி**

*திருச்சிற்றம்பலம்*

### 3.4 ) சிவகுருநாதர் வழிபாடு

உங்களை வழிப்படுத்தும் சிவகுரு உள்ளாரேயானால், அச்சிவ குருவினை எண்ணி வழிபடுக.

*திருச்சிற்றம்பலம்*

**என்னை எனக்கறிவித்தான் எங்கள் குருநாதன்**
**இணையடி எந்தலைவைத்தான் எங்கள் குருநாதன்**
**அன்னை பிதா குருவானான் எங்கள் குருநாதன்**
**அவனியெல்லாம் ஆளவைத்தான் எங்கள் குருநாதன்**
**முன்னைவினை நீக்கிவிட்டான் எங்கள் குருநாதன்**
**மூவர்க்கும் அறியவொண்ணா எங்கள் குருநாதன்**
**நன்மை தீமை யறியாதான் எங்கள் குருநாதன்**
**நான் தானாய் விளங்குகின்றான் எங்கள் குருநாதன்.**

*(சிவயோகர்சுவாமிகள் அருளிய நற்சிந்தனைப் பாடல்)*

*திருச்சிற்றம்பலம்*

**குறிப்பு :** சிவகுருவென்பர் சிவபெருமானையே முழுமுதற்கடவுள் என்று தெளிந்து வழிபடுபவராக இருத்தல் வேண்டும். சைவதீக்கைகள் வழங்கிய சைவசமயகுருமார்கள், சைவ வாழ்வியலில் பயிற்றுவிக்கும் சைவஞானியர் முதலியோர் யாவரும் சிவபெருமான் நம்மை வழிப்படுத்தப் பயன்படுத்திய, பயன்படுத்தும் கருவியரேயாவர். எனவே, அவர்களினை சிவகுருவாக வழிபடுதல் வேண்டும். குருவாகக்கொண்டவரிடம் ஏதேனும் குறைகள் ஏற்படின் அவற்றால் மனம் சஞ்சலமடையாது அனைத்து உயிர்களையும் தம்கருவிகளாய்க் கொண்டு ஆட்டுவிக்கும் சிவபெருமானின் சிவஞான அருட்கோலமாகிய தென்முகக்கடவுள் வடிவத்தை உணர்ந்து உய்க.

சிவகுருவழிபாட்டினை மிகச்சுருக்கமாகப் பின்வருமாறு ஓதி வழிபட்டுக்கொள்ளலாம்.

ஓம் தென்முகக் கடவுளே போற்றி
ஓம் நந்தியெம்பெருமானே போற்றி
ஓம் சமயகுரவரே போற்றி
ஓம் சந்தானகுரவரே போற்றி
ஓம் சிவகுருவே போற்றி

அல்லது

ஓம் தென்முகக் கடவுளே போற்றி
ஓம் நந்தியெம்பெருமானே போற்றி
ஓம் திருஞானசம்பந்தப்பெருமானே போற்றி
ஓம் திருநாவுக்கரசு பெருமானே போற்றி
ஓம் சுந்தரமூர்த்தி பெருமானே போற்றி
ஓம் மாணிக்கவாசகப்பெருமானே போற்றி
ஓம் மெய்கண்டப்பெருமானே போற்றி
ஓம் அருணந்தி சிவாச்சாரியப்பெருமானே போற்றி
ஓம் மறைஞானசம்பந்தப்பெருமானே போற்றி
ஓம் உமாபதி சிவாச்சாரியப்பெருமானே போற்றி
ஓம் சிவகுருவே போற்றி

### 4) சிவசூரியப்பெருமான் வழிபாடு – சூரியனில் அந்தர்யாமியாக சிவபெருமான் உள்ளார்.

இச்சிவபெருமானை சிவசூரியப்பெருமான் என்று போற்றுவோம். அவரை வழிபடுதல் சிவசூரியப்பெருமான் வழிபாடாகும்.

***“ஓம் சிவசூரியப்பெருமானே போற்றி”*** என்று சூரியனில் சிவபெருமான் இருப்பதாகப் பாவனை செய்து வழிபடுக. சிவசூரியப்பெருமான் திருவுருவப்படம் இருக்குமாயின், பூக்களை வைத்து வழிபடுக.

## சிவசூரியப்பெருமான்



*திருச்சிற்றம்பலம்*

**பேசிடு வெண்தாமரை ஆசனனாகிச் சிவந்த**
**பேரொளிசேர் தருவித்த மண்டல மத்தியனாய்**
**ஆசறு மாதுளங்கமலர் போலும் நிறத்தினனாய்**
**அலர்ந்தனவாயிரு புயங்கள் அடைந்த வெண்டாமரையின்**
**காசறு நாளம் பிடித்த கையிரண்டினோடு**
**கருதும் ஒருமுகம் இரண்டு கண்கள் உடையவனாய்த்**
**தேசுமலி செய்ய உடைதனை உடுத்தோனாகித்**
**திகழ் சிவசூரியனை நிதஞ் சிந்தனை செய்திடுவோம்**

*திருச்சிற்றம்பலம்*

## 5) அகத்தில் சிவபூசை செய்தல்

சிவபெருமான் உள்ளத்திலே உள்ளதாகப் பாவித்து (சிவலிங்கப் பெருமானை), அச்சிவபெருமானுக்கு அகத்திலேயே பூசை செய்வதாகப் பாவித்துக்கொள்க. இச்சமயம், ஓம் நமசிவாய என்ற மந்திரத்தை ஓதியவாறு சிந்திக்கலாம். விருப்பமான சிவாலயத்தை சிந்தித்து அங்குள்ள

சிவலிங்கப்பெருமானை வழிபடுவதாகவும் கொள்ளலாம். அகப்பூசை முடிந்ததும் பின்வரும் திருமுறையை ஓதுக.

*திருச்சிற்றம்பலம்*

**சிவன் வந்து தேவர் குழாமுடன் கூடப்**
**பவம் வந்திடநின்ற பாசம் அறுத்திட்டு**
**அவன் எந்தை ஆண்டருள் ஆதிப் பெருமான்**
**அவன் வந்து என்னுள்ளே அகப்பட்ட வாறே** *(திருமந்திரம் 2975)*

*திருச்சிற்றம்பலம்*

## 6) அருள்நீர் தயாரித்தல்

பஞ்சபாத்திரம் அல்லது வசதியான சிறுகுவளை ஒன்றினுள் நீர் எடுத்துக்கொள்க. அந்த நீரினுள் பூக்கள் சிலவற்றை இட்டுக்கொள்க. வலக்கையினால் பஞ்சபாத்திரத்தை மூடி ***"ஓம் நமசிவாய"*** மந்திரம் 11 தரம் ஓதிக்கொள்க.

திருவைந்தெழுத்து மந்திரத்தை ஓதிய பின்னர் தொடர்ந்து,

**ஓம் கங்கையே போற்றி**
**ஓம் யமுனையே போற்றி**
**ஓம் கோதாவரியே போற்றி**
**ஓம் சரஸ்வதியே போற்றி**
**ஓம் நர்மதையே போற்றி**
**ஓம் காவிரியே போற்றி**
**ஓம் மாணிக்க கங்கையே போற்றி**
**ஓம் பாலாவியே போற்றி**



என்று ஓதி,
***ஓம் நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி*** என்று ஓதி,

உத்தரணியைப் (சிறு கரண்டி) பயன்படுத்திப் பஞ்சபாத்திரத்தினுள் (குவளை) உள்ள நீர்த்துளிகளை வலக்கையினுள் எடுத்து பூசைப் பொருட்கள், கைமணி, பூசை இடம் முதலியவற்றுக்கும் தனக்கும் தெளித்துக்கொள்க.

**குறிப்பு :** *சிவபெருமானின் அட்டமூர்த்தங்களில் ஒன்று நீர். அதாவது, சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடங்கள் எட்டென்று சிறப்பித்துக் கூறப்படும். அவையாவன, நீர், நிலம், காற்று, நெருப்பு, ஆகாயம் (வானம்), சூரியன், சந்திரன், ஆன்மாக்கள் என்பவையாகும். எனவே, சிவபெருமான் பஞ்சபூதங்களிலும், சூரிய சந்திரனிலும், அனைத்து ஆன்மாக்களிலும் எழுந்தருளியுள்ளார் என்பதனையே இவ்வாறு சிறப்பித்துக் கூறுவர். அருள்நீர் தயாரித்தல் என்னும் இக்கிரியையில், நீரிலே ஒன்றாய் உடனாய் வேறாய் விளங்கும் சிவபெருமானின் திருவருளை துலங்கச்செய்வதாகப் பாவித்து, சிவசம்பந்தம்பெற்ற நீராகப் பாவித்துக்கொள்ளுதல் வேண்டும். இந்த புனித நீர், சிவசம்பந்தமான நீரென்பதால் அனைத்துப் பாவங்களையும் போக்கவல்லது என்பதாகவும், அனைத்து தீயதுகளையும் நீக்கவல்லதாகவும் பாவித்துக்கொள்ளுதல் வேண்டும். **"பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி"** என்று அப்பர்சுவாமிகளும் அருளியுள்ளார். பாவனையாகப் பாவிக்கப் பாவிக்க, அதுவே திருவருள் ஆற்றலாகச் சித்திக்கும்.*

## 7) சிவபூசை – சங்கல்பம்

**"எம்பெருமானே சிவபெருமானே எல்லாம்வல்ல கருணைமாக்கடலே, உமாதேவியார் உடனாய சிவபெருமானே, அடியேன் சிறியேன் நாயிற்கடையேன் செய்யும் இச்சிவபூசையில் பேரானந்தத்தோடும் பெருங்கருணையோடும் வந்து எழுந்தருளி, அடியேனின் சிவபூசையில் உள்ள குறைகளையெல்லாம் மன்னித்தருளி, இச்சிவபூசையினை பெரும் இரக்கம்கொண்டு ஏற்றருளி, அடியேனை ஆண்டருளவேண்டும். அடியேன் அகத்திலே உள்ள மாசுக்களை நீக்கியருளவேண்டும். அடியேனை உய்வடையச்செய்தல் வேண்டும்"** என்று ஓதிக்கொள்க. இவ்வாறு விண்ணப்பித்ததும், பொருத்தமான திருமுறை ஓதிடுக.

*திருச்சிற்றம்பலம்*

**பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானைப்
பின்னை என்பிழையைப் பொறுப்பானைப்
பிழையெலாம் தவிரப் பணிப்பானை
இன்ன தன்மையன் என்று அறியவொண்ணா
எம்மானை எளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழனத்தணி
ஆரூரானை மறக்கலுமாமே.**

*திருச்சிற்றம்பலம்*

## 8) சிவபெருமானை சிவலிங்கத்தில் எழுந்தருளச்செய்தல்

சிவபெருமானை சிவலிங்கத்தில் எழுந்தருளச்செய்தல் (ஆவாகனம் செய்தல்) நான்கு படிமுறைகளை உடையது.

### 1) ஆவாகனம் :

முதலில் உள்ளத்தில் சிவபூசையின்பால் நாட்டம்பெற்று நமது உள்ளத்தினை சிவபெருமானோடு சம்பந்தஞ் செய்துகொள்ளுதல் வேண்டும். இது இறையுணர் ஓங்குதல் ஆகும். அதாவது சிவசம்பந்த உணர்வு ஓங்கிநிற்றல் ஆகும்.

### 2) ஸ்தாபனம் :

உள்ளத்தில் சம்பந்தமாயிருக்கும் சிவ உணர்விற்கு உருவம் கொடுத்தலாகும். இது ஸ்தாபனம் என்று வடமொழியில் கூறப்படும்.

### 3) சந்நிதானம் :

அகத்திலே கற்பிதம் செய்த உருவத்தை புறத்திலேயுள்ள சிவலிங்கத்தில் (அல்லது சிவமூர்த்தம் ஒன்றில்) எழுந்தருளச் செய்வது ***சந்நிதானம்*** என்று கூறப்படும்.

### 4) சந்நிரோதானம் :

சிவமூர்த்தத்தில் எழுந்தருளிய சிவபெருமான் பூசை இனிதே முடிவுறும்வரை நம் குறைகளையெல்லாம் மன்னித்து, பூசையில் ஏற்படக்கூடிய இடையூறுகளையெல்லாம் கருணையோடு மன்னித்து, பூசை முடியும்வரை சிவமூர்த்தத்தில் பொலிவோடு விளங்கிட நாம் சிவபெருமானைச் சிக்கெனப்பற்றிநிற்றல் ***சந்நிரோதானம்*** எனப்படும். சிவமூர்த்தத்தில் எழுந்தருளிய இறைவிளக்கத்தைக் காத்தல் என்றும் கூறப்படும்.

இவ்வாறு, சிவபெருமானை எழுந்தருளச்செய்யும் படிமுறைகளானவை ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதானம் என்று நால்வகைப் படிமுறைகளாக விளங்குகின்றன.

இவற்றை முத்திரைகளைக் காட்டுவதனூடாக கிரியைகளில் வெளிப்படுத்துதல் வேண்டும்.



1) ஆவாகன முத்திரை



2) ஸ்தாபன முத்திரை



3) சந்நிதான முத்திரை



4) சந்நிரோதான முத்திரை

மனதிலே சிவபெருமானுடன் ஒன்றிய பாவனையோடு இந்த முத்திரைகளை சிவபெருமானின் திருவுருவத்திற்குக் காண்பித்து, நமது அகத்திலே உள்ள சிவபெருமான் நம்பால் கருணைகொண்டு புறத்தேயுள்ள சிவலிங்கத்தில் எழுந்தருளிவிட்டார் என்னும் பாவனையோடு இருகரத்தினையும் தலைமேல் கூப்பி வழிபடுக.

பின்வரும் திருமுறைகளை ஓதுதல் வேண்டும்.

*திருச்சிற்றம்பலம்*

**சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்**
**அவன் எனை ஆட்கொண்டு அளித்திடுமாகில் அவன்றனை யான்**
**பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால்**
**இவன் எனைப் பன்னாள் அழைப்பு ஒழியான் என்று எதிர்படுமே.**

*- அப்பர்தேவாரம்*

சிவபெருமான் என்று நான் அழைத்து ஏத்தத்
தவபெருமான் என்று தான் வந்து நின்றான்
அவபெருமான் என்னை ஆளுடை நாதன்
பவபெருமானைப் பணிந்து நின்றேனே — *- திருமந்திரம் (2971)*

*திருச்சிற்றம்பலம்*

இப்போது சிவபெருமான் நமது வழிபாட்டுக்குரிய சிவமூர்த்தத்தில் எழுந்தருளிவிட்டார் என்று பாவனை செய்துகொள்ளுதல் வேண்டும். ***ஒரு சக்கரவர்த்தி நமது இல்லத்திற்கு எழுந்தருளிவிட்டால் நமக்கு ஏற்படும் புல்லரிப்பும், தந்தையைக் கண்ட மாத்திரத்தில் ஏற்படும் அடக்கமும், தாயைக் கண்ட மாத்திரத்தில் ஏற்படும் அன்பும், நண்பனைக் கண்ட மாத்திரத்தில் ஏற்படும் உரிமையும், தலைவனைக் கண்ட மாத்திரத்தில் ஏற்படும் அடிமை உணர்வும் நமக்கு இத்தருணத்தில் பாவனையால் ஏற்படுத்திக்கொள்ளுதல் வேண்டும்.*** இப்பாவனையை நாள்தோறும் பூசையில் ஏற்படுத்திக்கொள்ளும்போது இயல்பாகவே இந்த உணர்வு நமக்கு ஏற்படத்தொடங்கும். அந்த உணர்வு காயாகிக் கனியாகும்போது சிவபூசையின் பலன்களை அனுபவிப்பது துலக்கமாய்த் தெரியத்தொடங்கும்.

## 09) தூப வழிபாடு

சிவபெருமானுக்கு தூபம் காட்டி வழிபடுக. தூபத்திற்குரிய பின்வரும் திருமுறைகளினை ஓதுக.

*திருச்சிற்றம்பலம்*

சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன் உன்னாமம்என் னாவில் மறந்தறியேன்
உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய் உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளாய்
அலந்தேன்அடி யேன்அதி கைக்கெடில வீரட்டா னத்துறை அம்மானே

தொங்கலும் கமழ்சாந்தும் அகில் புகையும் தொண்டர் கொண்டு,
அங்கையால் தொழுது ஏத்த, அருச்சுனற்கு அன்று அருள்செய்தான்
செங்கயல் பாய் வயல் உடுத்த செங்காட்டங்குடி அதனுள்,
கங்கை சேர் வார்சடையான் – கணபதீச்சுரத்தானே.

வெந்த குங்கிலியப் புகை விம்மவே
கந்த நின்று உலவும் கழிப்பாலையார்
அந்தமும் அளவும் அறியாததோர்
சந்தமால் அவர் மேவிய சாந்தமே

*திருச்சிற்றம்பலம்*

## 10) தீப வழிபாடு

*திருச்சிற்றம்பலம்*

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
    உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
    சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே
    அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
    தொண்டனேன் விளம்புமா விளம்பே

முத்து இலங்கு முறுவல் உமை அஞ்சவே
மத்த யானை மறுகவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்தகடவுள் கருகாவூர் எம்
அத்தர் வண்ணம் அழலும் அழல் வண்ணமே.
*திருச்சிற்றம்பலம்*

## 11) எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு திருவடி, திருவாய், திருமுடி துலக்குதல்

***ஓம் நமசிவாய திருவடி விளக்கி வணங்குகின்றோம்***

என்று பஞ்சபாத்திரத்திலுள்ள அருள் நீரெடுத்து எம்பெருமானின் திருவடி கழுவுவதாகப் பாவித்து, எம்பெருமானின் திருவடிக்குக் காட்டிவிட்டு, தட்டம் ஒன்றில் விடுக.

***ஓம் நமசிவாய திருவாய் விளக்கி வணங்குகின்றோம்***

என்று பஞ்சபாத்திரத்திலுள்ள அருள் நீரெடுத்து எம்பெருமானின் திருவாய் விளக்குவதாய் பாவித்து, எம்பெருமானின் திருவாய்க்குக் காட்டிவிட்டு, தட்டம் ஒன்றில் விடுக.

***ஓம் நமசிவாய திருமுடி விளக்கி வணங்குகின்றோம்***

என்று பஞ்சபாத்திரத்திலுள்ள அருள் நீரெடுத்து எம்பெருமானின் திருமுடி விளக்குவதாகப் பாவித்து, எம்பெருமானின் திருமுடிக்குக் காட்டிவிட்டு, தட்டம் ஒன்றில் விடுக.

**குறிப்பு :** வெளியிலிருந்து வீட்டுக்கு வந்ததும் நாம் நமது கால்களைக் கழுவிக்கொள்ளுவோம். தலையினைத் துடைத்துக்கொள்ளுவோம். வாயினைக் கழுவிக்கொள்ளுவோம். இவற்றைப்போல் நம்பூசைக்கு எழுந்தருளியிருக்கும் நம் தலைவராகிய சிவபெருமானுக்கு இவ்வகை உபசாரங்களை நாம் செய்கின்றோம். இதனை வடமொழியில் பாத்தியம், ஆசமனியம், அர்க்கியம் என்று விண்ணப்பிப்பர்.

## 12) தீபம் காட்டுக

*திருச்சிற்றம்பலம்*

**சொற்றுணை வேதியன் சோதி வானவன்**
**பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்**
**கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்**
**நற்றுணை யாவது நமச்சி வாயவே.**

*திருச்சிற்றம்பலம்*

## 13) அபிடேகம்

சிவபெருமானுக்கு அபிடேகம் செய்ய சிவபெருமானிடம் அனுமதியினை மானசீகப்பெற்றுக்கொண்டு, அபிடேகத்துக்கு ஒரு சிறிய பாத்திரத்தில் நீர் எடுத்துக் கொள்க. அந்தப் பாத்திரத்தின் (குவளையின்) வாயிற்கு, எமது வலது கையின் உள்ளங்கைப்பகுதியைக் காட்டியவாறு (குவளையினை வலதுகையால் மூடியிருப்பதுபோன்ற பாவனை), ***"ஓம் நமசிவாய"*** என்று 11 தரம் ஓதி, புனித கங்கை நதியாகிவிட்டது என்று பாவனை செய்து, அந்த நீரினைக் கொண்டு சிவலிங்கத்திற்கு அபிடேகம் செய்க. அபிடேகம் செய்யும்போது, இடதுகையில் நீர்ப்பாத்திரத்தை வைத்துக்கொண்டு ஐந்து விரல்களினையும் ஒன்றோடு ஒன்று சேர்த்துக்கொண்ட வலக்கையின் உள்ளங்கையில் மெதுமெதுவாக ஊற்றி, அந்த நீரினை சிவலிங்கத்தில் சிறிது சிறிதாக சொரியுமாறு ஊற்றுதல் வேண்டும். இவ்வாறு அபிடேகம் செய்யும்போது திருமுறைகளை ஓதுக.

*திருச்சிற்றம்பலம்*

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்தஆ ரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே

பால்நினைந் தூட்டுந் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப்
பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்
மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

*திருச்சிற்றம்பலம்*

## 14) சுவாமியை பட்டுத்துணியால் துடைத்துக்கொள்ளல்

பட்டுத்துணி ஒன்றினால் சிவலிங்கத்தினை எடுத்துத் துடைத்து மீண்டும் இருப்பிடத்தில் வேறொரு பட்டுத்துணி விரித்து வைத்துக்கொள்க.

இதன்போது, ***"ஓம் நமசிவாய"*** என்று திருவைந்தெழுத்தினை அகத்திலே தொடர்ச்சியாக ஓதிக்கொள்க. திருமுறைகள் பாடிக்கொண்டும் சுவாமியைப் பட்டுத்துணியினால் துடைத்துக்கொள்ளலாம்.

## 15) அலங்காரம்

வீபூதி அணிவித்து, சந்தனம் குங்குமம் அணிவித்து, பூக்களால் அலங்கரித்து, பட்டுத்துணியினால் அலங்கரித்து, இராசகோலத்தில் சிவபெருமான் விளங்குமாறு செய்திடுக. பட்டுத்துணியினை வாங்கிக்கொள்ள முடியாவிட்டால் கவலையை விடுக. சிவபெருமானைப் பூக்கள் கொண்டு அலங்கரிக்க. அலங்காரத்தின்போதும், ***"ஓம் நமசிவாய"*** என்று திருவைந்தெழுத்தினை இடைவிடாது ஓதிடலாம் அல்லது திருமுறைகளைப் பாடிக்கொண்டிருக்கலாம்.

## 16) சிவபெருமானுக்கு தூபம் காட்டுதல் வேண்டும்.

***"எம்பெருமானே, உமாதேவியார் உடனாய சிவபெருமானே, எல்லாம் வல்ல கருணைமாக்கடலே, தூபம் காட்டுகின்றோம் கருணைகொண்டு ஏற்றருள்வீர்"*** என்று ஓதிக்கொண்டு தூபம் காட்டுக. தூபத்திற்குரிய திருமுறைகளை ஓதுக.

## 17) தீபம் காட்டுக.

***"எம்பெருமானே, உமாதேவியார் உடனாய சிவபெருமானே, எல்லாம் வல்ல கருணைமாக்கடலே, தீபம் காட்டுகின்றோம் கருணைகொண்டு ஏற்றருள்வீர்"*** என்று ஓதிக்கொண்டு தீபம் காட்டுக. தீபத்திற்குரிய திருமுறைகளை ஓதுக.

## 18) சிவபெருமானுக்கு திருவடி, திருவாய், திருமுடி துலக்குதல்

***ஓம் நமசிவாய திருவடி விளக்கி வணங்குகின்றோம்***

என்று பஞ்சபாத்திரத்திலுள்ள அருள் நீரெடுத்து எம்பெருமானின் திருவடி கழுவுவதாகப் பாவித்து, எம்பெருமானின் திருவடிக்குக் காட்டிவிட்டு, தட்டம் ஒன்றில் விடுக.

***ஓம் நமசிவாய திருவாய் விளக்கி வணங்குகின்றோம்***

என்று பஞ்சபாத்திரத்திலுள்ள அருள் நீரெடுத்து எம்பெருமானின் திருவாய் விளக்குவதாய் பாவித்து, எம்பெருமானின் திருவாய்க்குக் காட்டிவிட்டு, தட்டம் ஒன்றில் விடுக.

***ஓம் நமசிவாய திருமுடி விளக்கி வணங்குகின்றோம்***

என்று பஞ்சபாத்திரத்திலுள்ள அருள் நீரெடுத்து எம்பெருமானின் திருமுடி விளக்குவதாகப் பாவித்து, எம்பெருமானின் திருமுடிக்குக் காட்டிவிட்டு, தட்டம் ஒன்றில் விடுக.

## 19) திருவமுது வழங்குதல்

ஒரு சிறுபாத்திரத்தில் (குவளையில்) நீரும், இன்னொரு பாத்திரத்திலோ (அல்லது வெற்றிலை முதலியவற்றிலோ) உணவுப்படையலும் சிவபெருமானுக்கு படையலாக வைத்தல் வேண்டும். சிறுதுளிக் கற்கண்டுகள், ஒரு வாழைப்பழம், ஏதேனும் சிறு உணவுப்பண்டத்தினை நைவேத்தியமாக வைக்கலாம். பஞ்சபாத்திரத்திலிருந்து அருள் நீர் எடுத்து, நைவேத்திய நீர்க்குவளையினுள்ளும் நைவேத்திய உணவுப்பண்டத்தின்மேலும் தெளிக்க.

நைவேத்திய நீர்க்குவளையினுள்ளும் நைவேத்திய உணவுப் பண்டத்தின்மேலும்பூக்கள்வைத்து, ***"ஓம்எல்லாம்வல்லகருணைமாக்கடலே, உமாதேவியார் உடனாய சிவபெருமானே, திருவமுதினையும் நீரினையும் கருணைகொண்டு ஏற்றருள்வீர்"*** என்று ஓதி, அப் பூக்களை சிவலிங்கத்தின் அடிப்பகுதியில் சமர்ப்பிக்க. இத்தருணம் ஓதக்கூடிய திருமுறைகளை ஓதுக.

*திருச்சிற்றம்பலம்*

**ஆலந் தான்உகந் தமுதுசெய் தானை**
**ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்**
**சீலந் தான்பெரி தும்முடை யானைச்**
**சிந்திப் பாரவர் சிந்தையு ளானை**
**ஏல வார்குழ லாள்உமை நங்கை**
**என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற**
**கால காலனைக் கம்பனெம் மானைக்**
**காணக் கண்அடி யேன்பெற்ற வாறே**

*திருச்சிற்றம்பலம்*

**குறிப்பு :** திருவமுதாக கற்கண்டு, வாழைப்பழம் முதலிய இயலுமான, விருப்பான ஒன்றினைப் படைக்கலாம்.

## 20) தீபம் காட்டுங்கள்

***"எல்லாம்வல்ல உமாதேவியார் உடனாய சிவபெருமானே, தீபம் காட்டுகின்றோம், கருணைகொண்டு ஏற்றருள்வீர்"*** என்று ஓதிடுக.

*திருச்சிற்றம்பலம்*

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே

*திருச்சிற்றம்பலம்*

## 21) திருமுறை ஓதுதல்

பஞ்சபுராணம் ஓதுக. அல்லது, முதலாம் திருமுறையிலிருந்து பன்னிரண்டாம் திருமுறை வரையும் ஒவ்வொரு திருமுறைக்கும் ஒரு பாடல் என்று எடுத்து, பன்னிரு அருட்பாடல்களைப் படிக்கலாம். திருப்புகழ், அபிராமி அந்தாதி முதலிய பதிவாக்கியத் திருப்பாடல்களினையும் ஓதிடலாம். குறைந்தபட்சம் கீழ்காட்டியுள்ள ஒரு தேவாரத்தினையேனும் பாடிடுக.

*திருச்சிற்றம்பலம்*

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர் தொழும் தேவே போற்றி
சென்றேறி எங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக்கு எல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

*திருச்சிற்றம்பலம்*

## 22) பவாதிநாம வழிபாடு

ஓம் பவாய தேவாய நமஹ
ஓம் சர்வாய தேவாய நமஹ
ஓம் ஈசானாய தேவாய நமஹ
ஓம் பசுபதயே தேவாய நமஹ
ஓம் உக்ராய தேவாய நமஹ
ஓம் ருத்ராய தேவாய நமஹ
ஓம் பீமாய தேவாய நமஹ
ஓம் மகாதேவ தேவாய நமஹ

## 23) பூமழை வழிபாடு

மேற்படி வழிபாடு முடிந்ததும், ***“ஓம் அருள்மிகு உமாதேவியார் உடனாய எல்லாம்வல்ல சிவபெருமானே, கருணைமாக்கடலே, சிவாய மந்திரப் பூமழை பொழிகின்றோம், கருணைகொண்டு ஏற்றருள்வீர்”*** என்று ஓதி, பூக்கள் கொண்டு எம்பெருமான்மேல் பூமழையாக சொரிந்து, தீபம் காட்டுக. கற்பூர தீபம் இருந்தால் கற்பூர தீபம் காட்டலாம்.

*திருச்சிற்றம்பலம்*

கற்பனை கடந்த சோதி
கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி
யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந்
திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற
பூங்கழல் போற்றி போற்றி

*திருச்சிற்றம்பலம்*

## 24) வேண்டுதல்களினை விண்ணப்பஞ் செய்து கொள்க

ஏதேனும் வேண்டுதல்கள் இருக்குமானால் அவற்றினை நினைத்து சிவபெருமானைப் பணிந்து வேண்டி வழிபடுக. ஒரு குழந்தைக்கு எந்த உணவு உகந்ததென்று தாய்க்குத் தெரியும். சிலபொழுது குழந்தை அழுது கேட்கும். அந்த உணவு கொடுக்கக்கூடியதென்றால் தாய் கொடுத்து மகிழ்விப்பார். குழந்தைக்குத் தீதென்று நினைத்தால் எங்ஙனம் அழுதாலும் தாய்

அதனைக் அக்குழந்தைக்கு கொடுப்பதில்லை. அப்படிக் கொடுப்பது தாயல்ல! தீய பெண்ணே அங்ஙனம் செய்வாள்! தீய சத்திகளினை வழிபடும்போது நமக்கு எதுவும் கிடைக்கலாம். ஆனால் அவை உண்மையிலேயே நமக்குத் தீமையானதாகும். சிவபெருமானை வழிபடுவது ஒரு குழந்தை தாயினை நோக்கி வேண்டுவது போன்றதாகும். சிவபெருமானினை தாயினும் சால அன்புடையவன் என்று சைவம் போற்றுகின்றது. எனவே, வேண்டுவது குற்றம் அல்ல! வினைகளுக்கேற்ப எம்மைப் பக்குவப்படுத்துவதற்கு எம் உயிருக்கு எது நன்றோ அதனையே எம்பெருமான் நமக்கு உகந்தளிப்பார்.

*திருச்சிற்றம்பலம்*

**வேண்டத் தக்கது அறிவோய் நீ! வேண்ட, முழுதும் தருவோய் நீ**
**வேண்டும் அயன், மாற்கு, அரியோய் நீ! வேண்டி, என்னைப் பணி கொண்டாய்**
**வேண்டி, நீ யாது அருள் செய்தாய், யானும், அதுவே வேண்டின் அல்லால்,**
**வேண்டும் பரிசு ஒன்று உண்டு என்னில், அதுவும், உன் தன் விருப்பு அன்றே**

**இடர் களையாரேனும் எமக்கு இரங்காரேனும்**
**படரும் நெறி பணியாரேனும் – சுடர் உருவில்**
**என்பறாக் கோலத்து எரியாடும் எம்மானார்க்கு**
**அன்பறாது என் நெஞ்சு அவர்க்கு**

*திருச்சிற்றம்பலம்*

## 25) வாழ்த்து

*திருச்சிற்றம்பலம்*

**வையம் நீடுக மாமழை மன்னுக**
**மெய் விரும்பிய அன்பர் விளங்குக**
**சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக**
**தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.**

**வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்**
**கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க**
**நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க**
**மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்**

*திருச்சிற்றம்பலம்*

என்று வாழ்த்தினை ஓதி, மீண்டும் கற்பூர தீபம் காட்டுக.

## 26) பிழைபொறுத்திட வேண்டுக

*திருச்சிற்றம்பலம்*

நீறாகி நீறுமிழும் நெருப்புமாகி
நினைவாகி நினைவினிய மலையான் மங்கை
கூறாகிக் கூற்றாகிக் கோளுமாகிக்
குணமாகிக் குறையாத உவகைக் கண்ணீர்
ஆறாத ஆனந்தத் தடியார் செய்த
அனாசாரம் பொறுத்தருளி அவர் மேலென்றுஞ்
சீறாத பெருமானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன் நானே

பொன்னும் மெய்ப்பொரும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானைப்
பின்னை என்பிழையைப் பொறுப்பானைப்
பிழை எல்லாம் தவிரப் பணிப்பானை
இன்ன தன்மையன் என்று அறியவொண்ணா
எம்மானை எளிவந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழனத்தணி
ஆரூரானை மறக்கலுமாமே

மற்று நான் பெற்றது ஆர் பெற வல்லார்
வள்ளலே! கள்ளமே பேசிக்
குற்றமே செயினும், குணம் எனக் கொள்ளும்
கொள்கையால் மிகைபல செய்தேன்
செற்று மீது ஓடும் திரிபுரம் எரித்த
திரு முல்லைவாயிலாய்! அடியேன்
பற்று இலேன் உற்ற படு துயர் களையாய்,
பாசுபதா! பரஞ்சுடரே!

கல்லாப் பிழையும், கருதாப் பிழையும், கசிந்து உருகி
நில்லாப் பிழையும், நினையாப் பிழையும், நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும், தொழாப் பிழையும்,
எல்லாப் பிழையும் பொறுத்து அருள்வாய் கச்சி ஏகம்பனே

சொல்லால் வருங் குற்றம் சிந்தனையால் வருந் தோடஞ் செய்த
பொல்லாத தீவினைப் பார்வையிற் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குகள் ஆயவும் மற்று
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்று எண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்பும் யான்
செய்கின்ற பூசை எவ்வாறு கொள்வாய் வினை தீர்த்தவனே

*திருச்சிற்றம்பலம்*

## 27) ஒடுக்கம் செய்க

அதன்பிறகு, சிவலிங்கத்திருமேனியில் எழுந்தருளச்செய்யப்பட்ட சிவபெருமானை மீண்டும் மனதில் எழுந்தருளச்செய்துகொள்ளுதல் வேண்டும்.

***“அருள்மிகு உமாதேவியார் உடனாய எல்லாம்வல்ல சிவபெருமானே, அடியேன் சிறியேன் நாயிற்கடையேன் செய்த இந்தப்பூசைக்கு அன்போடும் அருளோடும் ஆனந்தத்தோடும் கருணையோடும் எழுந்தருளி அருள்பாலித்த கருணைக்கடலே, அடியேனின் அகத்திலே எழுந்தருளி அடியேனை உய்வித்து அருளவேண்டும்”*** என்று வழிபட்டு, *பின்வரும் திருமுறையினை ஓதி,*

*திருச்சிற்றம்பலம்*

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே.

*திருச்சிற்றம்பலம்*

ஒரு பூவொன்றினை சிவலிங்கத்தின் அடிப்பகுதியில் வைத்து, வலதுகையின் மோதிரவிரலையும் பெருவிரலையும் சேர்த்துப்பிடித்து, அப்படியே அந்தக் கையினை எமது இதயத்திற்கு கொண்டுவந்து தொட்டுச்சேர்த்து, உமாதேவியார் உடனாய சிவபெருமான் சிவலிங்கத்திலிருந்து புறப்பட்டு, எமது இதயத்திலே எழுந்தருள்வதாகப் பாவித்து ஒடுக்கிக்கொள்ளுதல் வேண்டும்.

## 28) சண்டேசுவரர்பெருமான் வழிபாடு

சிவபூசைக்கு பயன்படுத்திய பூக்கள் முதல் சிவபெருமானுக்குப் படைத்த நைவேத்தியங்கள் அனைத்தும் சண்டேசுவரப்பெருமானுக்கே சொந்தமாகும். எனவே, சண்டேசுவரரைப் பணிந்து வழிபட்டு, சிவப்பிரசாதத்தினைப் பெற்றுக்கொள்ளவும் பூசைப்பலனைப் பெற்றுக் கொள்ளவும் வேண்டிக்கொள்ளவேண்டும்.

***“ஓம் சண்டேசுவரப்பெருமானே போற்றி”*** என்று மனதால் சண்டேசுவரப்பெருமானை நினைத்து வழிபடுக.

***“சண்டேசுவரப்பெருமானே, அடியேன் சிறியேன் நாயிற்கடையேன் அன்பால் செய்த சிவபூசையில் உள்ள குறைகளையெல்லாம் மன்னித்து, அடியோம் செய்த சிவபூசையினையும் சிவபெருமானுக்கு படைத்த திருவமுது முதலிய சிவநிர்மாலியங்களினையும் ஏற்று, சிவபூசையினாலும் சிவபெருமானுக்கு படைத்த திருவமுது முதலிய சிவநிர்மாலியங்களினாலும் அடியோம் உய்வடையத் திருவருள் பாலிக்கவேண்டும்”*** என்று மனம் உருகி நினைத்து வேண்டிக்கொள்க. தாளத்திரயம் (மூன்றுமுறை இடக்கையில் வலக்கை சுட்டுவிரல், நடுவிரல்கள் கொண்டு தட்டி சத்தம் எழுப்புதல்) செய்துகொள்க.

## 29) சிவப்பிரசாதம் பெறல்

திருநீற்றினை நெற்றிமீது மீண்டும் நன்றாகப் பரவிப் பூசிக்கொள்க. அபிடேகம் செய்த நீரினைச் சேமித்து தீர்த்தமாகப் பயன்படுத்திக்கொள்ளலாம். அல்லது சிவபெருமானுக்குப் படைத்த நீரினையும் தீர்த்தமாகக் கொள்ளலாம். சிவபெருமானுக்குப் படைத்த திருவமுதினையும் சிவப்பிரசாதமாகப் போற்றி உண்டு உய்க. சந்தனம் குங்குமம் அணிந்துகொள்ளலாம். பூசைக்குப் பயன்படுத்திய பூக்கள் சிலவற்றை எடுத்து காதில் அணிந்துகொள்ளலாம். இறுதியாக அல்லது மறுநாள் பூசைக்கு ஆய்தமாகும்போது, அருள் நீர், அபிடேக நீர் முதலியவற்றை பூச்சாடிகளில், பூமரங்களின் அடியில் ஊற்றிவிடலாம்.

# சுருக்கமான சிவபூசை

01. பிள்ளையார், சிவகுரு, சிவசூரியனை வழிபடுக.

02. நமது அகத்தில் உள்ள உமாதேவியார் உடனாய சிவபெருமான் புறத்தில் உள்ள சிவலிங்கத்தில் எழுந்தருளியதாகப் பாவித்துக் கொள்க.

03. தூப தீபம் காட்டுக. ( தீபம் இல்லாவிட்டால் தூபம் மட்டும் போதும்.)

04. அதன் பிறகு தட்டத்தில், சிறு பட்டுத்துண்டு வைத்து அதன்மேல் சிவலிங்கத்தினை வைத்து அபிடேகம் செய்க.

05. அதன்பிறகு, பட்டுத்துணியினால் சிவலிங்கத்தினைத் துடைக்க.

06. சிவலிங்கத்திற்கு திருநீறு பூசி, பூக்கள் வைத்து அலங்கரிக்க.

07. மீண்டும் தூபம் காட்டுக.

08. நீர் முதலிய நைவேத்தியங்கள் படைக்க. அவற்றை உமாதேவியார் உடனாய சிவபெருமானுக்கு சமர்ப்பிப்பதாகப் பாவனைசெய்து, பூவினால் அவற்றைத் தொட்டு, சிவலிங்கத்தின் அடியில் அப்பூவினை வைக்க.

09. திருமுறைகள் ஓதுக, திருப்புகழ், அபிராமி அந்தாதி ஓதுக. வாழ்த்துப் பாடுக.

10. தீபம் காட்டுக. தீபம் இல்லாவிட்டால், தூபம் காட்டுக.

11. ஒரு பூவினை எடுத்து, சிவலிங்கத்தின் அடிப்பகுதியில் வைத்து உமாதேவியார் உடனாய சிவபெருமான் எமது இதயத்திலே எழுந்தருள்வதாகப் பாவித்துக் கொள்க. மனதினைத் தூய்மைசெய்து ஆட்கொண்டருளவேண்டும் என்று வழிபடுக.

12. சண்டேசுவரப்பெருமானை நினைத்து, சிவபூசை சிவநைவேத்திய நிர்மாலியங்களினை ஏற்றருளி, அவற்றால் அடியோம் உய்வடைய வேண்டும் என்று வணங்கி, கைகளை மூன்றுமுறை தட்டி, ஓம் சண்டேசுவரப்பெருமானே போற்றி என்று ஓதி வழிபடுக. சிவபெருமானுக்குப் படைத்தவற்றினை சண்டேசுவரப்பெருமானுக்கு அர்ப்பணஞ்செய்து சிவப்பிரசாதமாகக் கொண்டு பயன் பெறுக.



